# ॥ लघुवाक्यवृत्तिः ॥

## லகுவாக்ய வ்ருத்திஃ

(1)

स्थूलो मांसमयो देहः सूक्ष्मः स्याद्वासनामयः ।
ज्ञानकर्मेन्द्रियैः सार्धं धीप्राणौ तच्छरीरगौ ॥

ஸ்தூலோ மாம்ஸமயோதேஹ:
ஸூக்ஷ்ம: ஸ்யாத்வாஸனமய:
ஜ்ஞானகர் மேந்த்ரியை:
ஸார்தம் தீப்ராணௌ தத்சரீரகௌ ।

*மாம்ஸ மயமானது ஸ்தூல சரீரம். ஸூக்ஷ்ம சரீரம் வாஸனாமயம். ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் இவற்றுடன் கூட புத்தியும், பிராணனும் அந்த சரீரத்தில் இருக்கின்றன.*

(2)

अज्ञानं कारणं साक्षी बोधस्तेषां विभासकः ।
बोधाभासो बुद्धिगतः कर्ता स्यात्पुण्यपापयोः ॥

அஜ்ஞானம் காரணம் ஸாக்ஷீ
போதஸ் தேஷாம் விபாஸக: ।
போதாபாஸோ புத்திகத:
கர்தா ஸ்யாத் புண்யபாபயோ: ॥

*முன்னிருந்த அறியாமைதான் கார்யங்களைச் செய்ய காரணமாவது. அறிவு, அவற்றை வெளிப்படுத்தும் ஸாக்ஷீ. புத்தியில் உள்ள அறிவுப்போலி கர்தா புண்ய-பாபங்களைச் செய்கிறது.*

(3)

स एव संसरेत्कर्मवशाल्लोकद्वये सदा ।
बोधाभासाच्छुद्धबोधं विविच्यादतियत्नतः ॥

ஸஏவ ஸம்ஸரேத் கர்மவசாத் லோகத்வயே ஸதா ।
போதாபாஸாத் சுத்தபோதம் விவிச்யாத் அதியத்னத: ॥

அந்த அறிவுப்போலிதான் இரண்டு லோகத்திலும் கர்மாக்களையனுசரித்து இயங்குகிறது. அந்த அறிவுப்போலியை சுத்த அறிவிலிருந்து மிக பிரயாசையுடன் பிரித்து விட வேண்டும்.

(4)

जागरस्वप्नयोरेव बोधाभासविडम्बना ।
सुप्तौ तु तल्लये बोधः शुद्धो जाड्यं प्रकाशयेत् ॥

ஜாகரஸ்வப்நயோரேவ போதாபாஸ விடம்பநா ।
ஸுப்தெள து தல்லயே போத: சுத்தோ ஜாட்யம்
ப்ரகாசயேத்

ஜாக்ரத் - ஸ்வப்ன நிலைகளில் தான் அறிவுப்போலியின் மிடுக்கான இயக்கம் இருக்கும். ஸுஷுப்தியில் அறிவுப் போலி மங்கியபொழுது சுத்த அறிவு அறியாமையை தெளிவாக்கும்.

(5)

जागरेऽपि धियस्तूष्णींभावः शुद्धेन भास्यते ।
धीव्यापाराश्च चिद्भास्याश्चिदाभासेन संयुताः ॥

ஜாகரேடபி தியஸ்தூஷ்ணீம் பாவ: சுத்தேந பாஸ்யதே ।
தீவ்யாபாராஸ்ச சித்பாஸ்யா: சிதாபாஸேந ஸம்யுதா: ॥

ஜாக்ரத் நிலையில் கூட அறிவுப்போலி, சுத்த அறிவு மேலிட்டபோது தெளிவாக்கப்படும். புத்தியின் இயக்கம் சிதாபாஸத்துடன் கூடிய சித் மூலமாக விளங்கும்.

(6)

वह्नितप्तजलं तापयुक्तं देहस्य तापकम् ।
चिद्भास्या धीस्तदाभासयुक्ताऽन्यं भासयेत्तथा ॥

வஹ்நிதப்தஜலம் தாபயுக்தம் தேஹஸ்ய தாபகம் ।
சித்பாஸ்யா தீ ஸ்ததாபாஸயுக்தா அன்யம் பாஸயேத்ததா ॥

தீயில் சூடாக்கிய தண்ணீர் சுட்டோடவே உடலை சுடும். அதுபோல சித்தினால் தெளிவாகும் புத்தி, புத்திப் போலியுடன் சேர்ந்து மற்றதை விளங்கச் செய்யும்.

(7)

रूपादौ गुणदोषादिविकल्पाः बुद्धिगाः क्रियाः ।
ताः क्रियाः विषयैः सार्धं भासयन्ती चितिर्मता ॥

ரூபாதௌ குணதோஷாதி விகல்பா புத்திகா: க்ரியா: ।
தா: க்ரியா விஷயை: ஸார்தம் பாஸயந்தீ சிதிர்மதா ॥

ரூபாதிகளில் குணமோ தோஷமோ கண்டறிய புத்தியின் செயல்பாடே காரணமாகிறது. அவ்வித செயல்பாட்டையும் விஷயங்களையும் சேர்த்து தெளிய வைப்பதே 'சித்' என்ற உணர்வு.

(8)

रूपाच्च गुणदोषाभ्यां विविक्ता केवला चितिः ।
सैवानुवर्तते रूपरसादीनां विकल्पने ॥

ரூபாத்ச குணதோஷாப்யாம் விவிக்தா கேவலா சிதி: ।
ஸைவாநு வர்ததே ரூபரஸாதீநாம் விகல்பநே ॥

ரூபத்திலிருந்தும், அதன் குண தோஷங்களிலிருந்தும் வேறுபட்டது சித் என்ற உணர்வு. ஆனால் ரூபம், ரஸம் இவற்றின் விகல்பங்களில் அதே சித் தொடர்ந்து செயல்படும்.

(9)

क्षणे क्षणेऽन्यथाभूता धीविकल्पाश्चितिर्न तु ।
मुक्तासु सूत्रवद्बुद्धिविकल्पेषु चितिस्तथा ॥

'இதுவா' - 'அதுவா' என்று தெளியாத நிலையில் புத்தி நொடிக்கு ஒன்றாக மாறுபடும். ஆனால் அப்படியல்ல சித் - உணர்வு. என்றாலும் முத்துக்கள் நூலில் கோர்க்கப்பட்டுள் ளனவா? இல்லையா என்றவிடத்தில் சித்தும் மாறுபடுகிறது.

**(10)**

**मुक्ताभिरावृतं सूत्रं मुक्तयोर्मध्य ईक्ष्यते ।**
**तथा वृत्तिविकल्पैश्चित् स्पष्टा मध्ये विकल्पयोः ॥**

**முக்தாபிராவ்ருதம் ஸூத்ரம் முக்தயோர்மத்ய ஈக்ஷ்யதே ।**
**ததா வ்ருத்திவிகல்பை ஸ்சித் ஸ்பஷ்டா மத்யே விகல்பயோ: ॥**

*முத்துக்கள் அடர்த்தியாக அமைந்தபோதும் இரு முத்துக்களின் நடுவில் காணக் கிடைக்கிறது. அது போலவே இரண்டு விகல்பங்களில் நடுவில் சித் மாற்றுச் செயல்களால் தெளிவாகிறது.*

**(11)**

**नष्टे पूर्वविकल्पे तु यावदन्यस्य नोदयः ।**
**निर्विकल्पकचैतन्यं स्पष्टं तावद्विभासते ॥**

**நஷ்டே பூர்வ விகல்பே து யாவதன்யஸ்ய நோதய: ।**
**நிர்விகல்பக சைதன்யம் ஸ்பஷ்டம் தாவத் விபாஸதே ॥**

*முன்னதான மாற்று எண்ணம் தொலைந்து, வேறு மாற்று எண்ணம் தோன்றும்வரை இடையில் எதையும் சாராத சைதன்யம் தெளிவாக வெளிப்படுகிறது.*

**(12)**

**एकद्वित्रिक्षणेष्वेवं विकल्पस्य निरोधनम् ।**
**क्रमेणाभ्यस्यतां यत्नाद्ब्रह्मानुभवकाङ्क्षिभिः ॥**

**ஏகத்வித்ரிக்ஷணேஷ்வேவம் விகல்பஸ்ய நிரோதனம் ।**
**க்ரமேணாப்யஸ்தாம் யத்னாத் ப்ரஹ்மானுபவ காங்க்ஷிபி: ॥**

*ப்ரஹ்மானுபவம் வேண்டி விழையும் ஸாதகர் ஒன்று, இரண்டு, மூன்று க்ஷணங்களுக்கு மட்டுமாவது விகல்பத்தை தடுக்கும் விதத்தை முயற்சியுடன் அப்யாசம் செய்யலாமே.*

(13)

सविकल्पकजीवोऽयं ब्रह्म स्यान्निर्विकल्पकम् ।
अहं ब्रह्मेति वाक्येन सोऽयमर्थोऽभिधीयते ॥

ஸவிகல்பக ஜீவோऽயம் ப்ரஹ்ம தந்நிர்விகல்பகம் ।
அஹம் ப்ரஹ்மேதி வாக்யேந ஸோऽய மர்த்தோऽபிதீயதே ॥

'அஹம் ப்ரஹ்ம' - நானே பிரம்மம் - என்ற வாக்யம் மாறுபட்ட நிலைகளில் இருக்கும் இந்த ஜீவன்தான் மாறுபடாத ப்ரம்மம் என்ற கருத்தைக் கூறுகிறது.

(14)

सविकल्पकचिद्योऽहं ब्रह्मैकं निर्विकल्पकम् ।
स्वतस्सिद्धा विकल्पास्ते निरोद्धव्याः प्रयत्नतः ॥

ஸவிகல்பக சித்யோऽஹம் ப்ரஹ்மைகம் நிர்விகல்பகம் ।
ஸ்வதஸ்ஸித்தா விகல்பாஸ்தே நிரோத்தவ்யா: ப்ரயத்னத: ॥

அதாவது, வெவ்வேறு விகல்பங்களுக்குள்ளான 'நான்' என்பது ஒரு நிர்வகல்பக ப்ரஹ்மமாகும். இங்கு இயற்கையாக அமைந்த விகல்பங்கள் முயற்சி செய்து நிறுத்தப்பட வேண்டும்.

(15)

शक्यः सर्वनिरोधेन समाधिर्योगिनां प्रियः ।
तदशक्तौ क्षणं रुद्ध्वा श्रद्धालुर्ब्रह्मतात्मनः ॥

சக்ய: ஸர்வநிரோ தேந ஸமாதி: யோகிநாம் ப்ரிய: ।
ததசக்தெள க்ஷணம் ருத்வா ச்ரத்தாலு: ப்ரஹ்மதாऽத்மந: ॥

எல்லா விகல்பங்களையும் ஒழித்து எந்த ஒரு முனைப்பான உணர்வு ஏற்படுகிறதோ அதுவே யோகிகளுக்கு உகந்தது. அது முடியாதெனின், ஒரு நொடியாவது தடை செய்து ஆத்மாவுக்கு பிரம்மத் தன்மை எதிர்நோக்கத் தக்கது.

(16)

श्रद्धालुर्ब्रह्मतां स्वस्य चिन्तयेद् बुद्धिवृत्तिभिः ।
वाक्यवृत्त्या यथाशक्ति ज्ञात्वा ह्यभ्यस्यतां सदा ॥

ச்ரத்தாலுர் ப்ரஹ்மதாம் ஸ்வஸ்ய
சிந்தயேத் புத்திவ்ருத்திபி: ।
வாக்யவ்ருத்யா யதாசக்தி ஜ்ஞாத்வா
ஹ்ப்யஸ்யதாம் ஸதா ॥

ஊக்கமுள்ளவர் தனது புத்தியின் செயல்பாடுகளால் 'நான் பிரும்மமே' என்று சிந்திக்க வேண்டும். அதற்கு அடிப்படையாக, வாக்ய வ்ருத்தியை முடிந்தவரைப் பயின்று, அறிந்து பழகிக் கொள்ள வேண்டும்.

**(17)**

तच्चिन्तनं तत्कथनं अन्योन्यं तत्प्रबोधनम् ।
एतदेकपरत्वं च ब्रह्माभ्यासं विदुर्बुधाः ॥

தத்சிந்தனம் தத்கதநம், அன்யோன்யம் தத்ப்ரபோதநம்।
ஏததேக பரத்வம் ச ப்ரஹ்மாப்யாஸம் விதுர்புதா : ॥

ப்ரஹ்மத்தைப் பற்றிய சிந்தனையும், பிரஹ்மத்தைப் பற்றிப் பேசுதலும், பின் ஒருவருக்கொருவர் பேசும்பொழுதும், பிரஹ்மத்தைப் பற்றி அறிவுரை செய்து கொள்ளுதலும் இன்னும் பிரஹ்மத்தையே நாடியிருத்தலுமே பிரஹ்மாப்யாஸம் என அறிவாளிகள் கூறுவர்.

**(18)**

देहात्मधीवद्ब्रह्मात्मधीदार्ढ्ये कृतकृत्यता ।
यदा तदायं म्रियतां मुक्तोऽसौ नात्र संशयः ॥

தேஹாத்மதீவத் ப்ரஹ்மாத்மதீ தார்ட்யே க்ருதக்ருத்யதா।
யதா ததாऽயம் ம்ரியதாம் முக்தோऽஸெள நாத்ரஸம்சய: ॥

தேகத்தை ஆத்மாவாக அறியும் உறுதிபோல் பிரஹ்மத்தை ஆத்மாவாக அறியும் உறுதியும் வந்து விட்டால் போதுமானது. எந்த நேரத்தில் மரித்தாலும், அவர் முன்னமேயே முக்தி பெற்றவராய் நிச்சயம் கருதலாம்.

லகுவாக்யவ்ருத்தி முற்றிற்று

